5th July 1962]

**திரு. கி. இரா. சம்பந்தம் :** மதுவிலக்குக் கமிட்டிகளில் சொல்லப் படும் யோசனைகள் எப்போதுமே ஏற்றுக்கொள்ளப்படுகின்றனவா? ஏற்றுக்கொள்ளப்படாதிருந்தால், இனியாவது ஏற்றுக்கொள்ள தக்க நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**கனம் திரு. பூ. கக்கன் :** ஆலோசனைகள் சொல்வதற்காகத்தான் கமிட்டிகள் அமைக்கப்படுகின்றன. நல்ல ஆலோசனைகளெல்லாம் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.

**திருமதி பி. கே. ஆர். லக்ஷ்மிகாந்தம் :** தலைவர் அவர்களே, மது விலக்கு ஆலோசனை கமிட்டிகளில் மது அருந்துபவர்கள் இருக்கக் கூடாது என்ற விதி அவசியம் இருக்கப்படவேண்டும். அந்த முறையில் விதிகளைத் திருத்தி உடனடியாக உத்தரவு போடப் படுமா ?

**கனம் திரு. பூ. கக்கன் :** உடனடியாக உத்திரவு போடுவது ஒரு பிரச்னை அல்ல. ஏற்கனவே ஜில்லாதோறும் டெவலப்மென்ட் கவுன்சில் இருக்கிறது. சுகாதாரத்திற்கும் க்ஷேம நலத்திற்கும் ஒரு ஸ்டாண்டிங் கமிட்டி இருக்கிறது. அந்தக் கமிட்டியே இந்த வேலையையும் செய்துவிடலாமா என்பது பரிசிலனையில் இருக்கிறது.

## குளித்தலையையும் முசிரியையும் இணைக்கப் பாலம் கட்டும் திட்டம்

* *134* **கேள்வி.—திரு. இராம அரங்கண்ணல் (திரு. மு. கருணா நிதியின் சார்பாக) :** கனம் பொதுப் பணித் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

போக்குவரத்து வசதிக்காகவும் வாணிப வளர்ச்சிக்காகவும் குளித்தலையையும் முசிரியையும் இணைக்க பாலம் கட்டும் திட்டம் எந்த அளவில் இருக்கிறது ?

THE HON. SRI V. RAMAIAH : The bridge work across Cauvery to connect Kulithalai with Musiri is roughly estimated to cost Rs. 60 lakhs. It has not been possible to include this work in the Third Five-Year Plan in view of the limited funds allotted for road works and the huge cost involved for the proposed bridge work.

**திரு. மீ. கல்யாணசுந்தரம் :** பேட்டைவாய்த்தலையில் சர்க்கரை ஆலை இருக்கக்கூடிய காரணத்தினலே, கரும்பு உற்பத்திக்குச் சாதகமாக இருப்பதற்காகவும், அந்த ஆலையின் கரும்பு உற்பத்திப் பரப்பை விஸ்தரிப்பதற்காகவும் வேண்டி, கரும்பு செஸ் நிதியிலிருந்தாவது இந்தப் பாலத்தைக் கட்டுவதற்கு நடவடிக்கை எடுக்கப்படுமா ?

**கனம் திரு. வி. ராமைய்யா :** இப்பொழுதிருக்கக்கூடிய நிதி நிலையில், அந்தப் பாலத்தை மூன்ருது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் எடுத்துக்கொள்வது சாத்தியம் இல்லை. ஆனல், அடுத்து வரும் திட்டங்களைப் பரிசீலனை செய்யும்போது, இப்பொழுது ஏற்பட்டிருக்கக்கூடிய கரும்பு ஆலையின் அவசியத்தை மனதிலே

வைத்துப் பரிசிலனை செய்து, அன்றைக்கு இருக்கும் நிதி நிலைக்குத் தகுந்தபடி, இந்தப் பாலத்தை எடுத்துக்கொள்ள முடியுமென்றால், எடுத்து நிறைவேற்றுவதிலே கஷ்டம் இருக்காது.

### *High schools (introduction of XI Standard)*

* 135 *Q.*—SRI V. KRISHNAMOORTHY : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Government propose to introduce XI Standard in the high schools during current year?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி :** 'இந்தப் புது முக வகுப்பை மாற்றிவிட்டு பதினோரும் வகுப்பைப் பள்ளியிலேயே ஆரம்பிக்கப் போகின்றோம்' என்று ஏற்கனவே அமைச்சர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இப்பொழுது இருக்கின்ற நிலையில், 'பிரி யூனிவர்சிடி க்ளாஸி'லே அதிகமான நெருக்கடி இருப்பதும், 'டிக்ரி கோர்ஸி'ல் அதிகமான மாணவர்கள் வராததும் சர்க்காருக்குத் தெரியும். ஆகவே, இந்த நிலையை மாற்றியமைக்கின்ற முறையில், ப்ரீ யூனிவர்சிடி கோர்ஸையோ அல்லது மூன்று வருஷப் பட்டப் படிப்பையோ விட்டுவிட்டு, 'இன்டர்மீடியட், இரண்டு வருஷ பீ.ஏ. கோர்ஸ்' என்ற பழைய முறையை அரசாங்கம் மீண்டும் கொண்டுவர முன்வருமா ? யூனிவர்ஸிடி கூட இதுபோன்று அபிப்பிராயப்படுவது அமைச்சர் அவர்களுக்குத் தெரியுமா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** 'உயர்நிலைப் பள்ளிகளில் பதினோரும் வகுப்பைத் துவங்கும் உத்தேசம் இந்த ஆண்டில் உண்டா ?' என்ற கேள்விக்கு 'இந்த ஆண்டில் அப்படிப்பட்ட உத்தேசம் இல்லை' என்று நான் விடை அளித்தேன். ஆனால், நிரந்தரமாக எத்தகைய ஒரு சீர்திருத்தத்தை நிறைவேற்றுவது என்பது இப்பொழுது ஆலோசனையில் இருக்கிறது. இது சம்பந்தப்பட்டவர்களையெல்லாம் கலந்தாலோசித்து, இந்த ஆண்டு இறுதிக்குள் கல்விப் பிரச்னைகளைப் பொறுத்து நிரந்தரமான முடிவு காண வேண்டும் என்பது என்னுடைய அவா. அந்த வகையிலே கவனம் செலுத்திக்கொண்டு வருகிறேன். இதிலே யூனிவர்ஸிடியினுடைய அபிப்பிராயம் என்ன என்பது எனக்குத் தெரியாது. நான் அதைப்பற்றித் தெரிந்துகொள்ளவில்லை, இதுவரையிலும். பதினோருவது ஸ்டாண்டர்டு என்னும்போது முன்பு இருந்த பதினோருவது ஸ்டாண்டர்டு அல்ல, ப்ரீ யூனிவர்ஸிடி கோர்சுக்குப் பதிலாக ஹையர் செகண்டரி ஸ்கூல்களில் பதினோருவது ஸ்டாண்டர்டை வைப்பதில்லை என்று 16—11—1961-லே ஒரு உத்திரவு பிறப்பிக்கப்பட்டுள்ளது. அதாவது,—

" The introduction of new XI Standard in 1962–63 has to be planned for from this year itself. At this juncture, Government have been confronted with certain problems involved in the change-over to the new scheme which were not sisualised fully at the time when the change was decided upon. There has also been a certain amount of rethinking on the subject in educational circles.